உ

சிவமயம்

# திருவாமாத்தூர் - துதிப்பாமாலை

நூலாசிரியர்
மகான் - வண்ணச்சரபம்
அருள்மிகு. தண்டபாணி சுவாமிகள்
திருவாமாத்தூர்

பதிப்பாளர்
சிவத்திரு. சிவ. வேதாசலம் அவர்கள்
சை. சி. பெ. மன்ற முன்னாள் பொருளாளர்
சென்னை-30

சென்னை சைவ சித்தாந்தப்பெருமன்றத்தின்
81-வது ஆண்டு விழாவில்
சென்னை - 'சோதிடரத்ந'
டாக்டர் சி. எம். சோமசுந்தரம் அவர்கள்
54-வது ஆண்டு நிறைவைப்பாராட்டி
வெளியிடப்பெறுகிறது
1987

சிவமயம்

# திருவாமாத்தூர் - துதிப்பாமாலை

நூலாசிரியர்
திருப்புகழ்ச்சுவாமிகள், முருகதாச சுவாமிகள்என்னும்
**அருள்மிரு. தண்டபாணி சுவாமிகள்**
திருவாமாத்தூர்

இஃது
வடார்க்காடு மாவட்டம் இரத்தினகிரி
தவத்திரு. பாலமுருகனடிமை அவர்கள் ஆதரவில்
1987 மே 16, 17 தேதிகளில் நடைபெற்ற
சென்னை சைவ சித்தாந்தப்பெருமன்றத்தின்
81 -ம் ஆண்டு விழாவில்
சென்னை "சோதிடரத்ன"
**டாக்டர் சி. எம். சோமசுந்தரம் அவர்கள்**
54 - வது ஆண்டு நிறைவு வெளியீடாக

சென்னை. சை. சி. பெ. ம. முன்னாள் பொருளாளர்
**சிவத்திரு. சிவ. வேதாசலம் அவர்களால்**
பதிப்பித்து வெளியிடப்பெறுகிறது
1987

# முன்னுரை

நடுநாட்டுத் தலங்கள் இருபத்திரண்டில் இருபத்தொன்றாவது தலமாக விளங்குவது திருவாமாத்தூர். அருள்மி குமுத்தாம்பிகை. உடனுறை அபிராமேசுவரர் இத்தலத்தில் வீற்றிருந்து பசுக்களுக்கு முன்னர் கொம்பு ஈந்து அவைகளின் துயரத்தைப் போக்கியருளிய தலம். மூவர் முதலிகள் இத்தலத்து இறைவனைப் பாடித்துதித்து மகிழ்வெய்தினர், குறிப்பாக திருஞான சம்பந்த சுவாமிகள் பாடி -யருளிய "குன்றவார்" எனத்தொடங்கும் பதிகத்தில் ஐந்தாவதாக வருகின்ற "தொண்டர் வந்து" என்னும் பாடலைப்பாடியமோது தன்னுடன் வந்த பல அடியார்களின் பசித்துன்பத்தைப் போக்க வேண்டிய உணவு வகைகள் கிடைக்கப்பெற்று அடியார்கள் பசித்துன்பம் நீங்கி இன்புற்றனர் என்பர்.

பெருமைமிக்க இத்தலத்தில் கடந்த 1960 ஆம் ஆண்டில் குடமுழுக்கு விழா சிறப்பாக நடைபெற்றது இன்றைக்கு 27 ஆண்டுகள் ஆகிவிட்டதால் மீண்டும் குடமுழுக்கு விழா நடந்தத் திட்டமிட்டு திருப்பணிகள் கோவை சிரவணபுரம் தவத்திரு, சுந்தரசுவாமிகளின் சீரிய தலைமையில் நடைபெற்று வருகின்றது,

சென்ற பத்தொன்பதாம் நூற்றாண்டில் தமிழகத்தில் தெய்வ நலஞ்சேர்ந்த சான்றோர்கள் வாழ்ந்தருந்தார்கள் அத்தகைய சான்றோர்களில் ஒருவராகத் திகழ்ந்தவர் மகான் வண்ணச்சரபம் அருள்மிகு தண்டபாணி சுவாமிகள். சுவாமிகளின் பெயரர் தவத்திரு முருகதாச சுவாமிகள் தற்போது கௌமார மடத்து ஆதீன கர்த்தராக அமர்ந்து இவ்வூரில் முக்தியடைந்த மகான் வண்ணச்சரபம் தண்டபாணிசுவாமிகளின் சமாதிக் கோயிலைத் தரிசிக்க வரும் அன்பர்களுக்கு ஆசியுரையும், அருளுரையும் வழங்கி வருகின்றார்கள். அடியேனுக்கு சுவாமிகளிடமும் ,சுவாமிகளின் அருமை மகனாரும் அருள்மிகு தண்டபாணி சுவாமிகளின் கொள்ளுப் பெயரருமான வித்துவான் தி மு சங்கரலிங்கம் அவர்களிடமும் நெருங்கிய தொடர்பு உண்டு.

சமீபத்தில் இத்திருத்தலத்திற்குச் சென்றிருந்தேன் போது அவ்வமயம் வித்துவான் தி மு. சங்கரலிங்கம் அவர்களுடன் உரையாடிக் கொண்டிருந்தபோது "சுவாமிகளின்'' பல நூல்கள் ஓலைச் சுவடியிலேயே உள்ளன அவைகள் எல்லாம் அச்சுவாகனம் ஏறினாலன்றிகாலப்போக்கில் அத்திருப்பாடல்கள் மக்களுக்கு கிடைக்காமல் போய்விடக்கூடுமே என்று கருதுகிறோம்" என்கிறார்கள்.

அடியேன் சென்னை சைவ சித்தாந்தப் பெருமன்றத்தில் தொடர்புடையவன். மன்றத்தின் 81ஆம் ஆண்டு விழா வரும் மே

மாதம் இரத்தினகிரியில் தவத்திரு பாலமுருகனடிமை அவர்களின் சீரிய ஆதரவில் நடைபெற உள்ளது, "அவ்வமயம் சுவாமிகளின் பாடல்கள் சிலவற்றை வெளியிட எண்ணுகிறேன்" என்றேன்.

எண்ணிறந்த பழைய ஓலைச் சுவடிகளைப் பார்த்தபோது திருவாமாத்தூர் தலத்து இறைவன் மீது பாடியருளிய பதிகம் ஒன்று கிடைத்தது. "சுந்தரன் பாட லுக்கா .. .......... " எனத் தொடங்கும் அப்பதிகத்தை வெளியிட விரும்புகிறேன் என வித்துவான் தி. மு. சங்கரலிங்கம் அவர்களிடத்தில் தெரிவித்தபோது அவர்கள் மகிழ்ச்சியுடன் இசைவு தந்ததோடு இந்நூலை அச்சிட, பிழைபார்க்க, மற்றெல்லா உதவிகளையும் அவர் முன்நின்று செய்துதவினார்கள். அவர்கட்கு யான் மிகுந்த கடப்பாடு உடையேன்,

இச்சிறுநூலுக்கு அணிந்துரை வழங்கியும் பெருமன்ற ஆண்டுவிழாவின்போது வெளியிட இசைவும் தந்த சைவ சித்தாந்தப் பெருமன்றத்தின் தலைவர் சிவத்திரு மு கிருட்டிணன் ஐ, ஏ எஸ். (ஓய்வு) அவர்கட்கு என் இதயபூர்வமான நன்றியினை உரித்தாக்குகின்றேன்

இந்நூலின் மற்றொரு பகுதியாக, சென்னை சைவசித்தாந்தப் பெருமன்ற உறுப்பினர் எனதுகெழுதகை நண்பரும்சோதிடஆசிரியருமான டாக்டர் சி, எம், சோமசுந்தரம் அவர்களின் 54ஆம் ஆண்டு நிறைவு விழாவைப் பாராட்டி அவரின் வாழ்க்கை குறிப்பையும் சேர்த்து வெளியிட்டுள்ளேன். இக்குறிப்புரையைச் சரிப்பார்த்துக் கொடுத்த டாக்டர் அ. நாகலிங்கம் எம். ஏ., இந்துக் கல்லூரி, பட்டாபிராம் அவர்கட்கும் என் நன்றியினைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

வேண்டுவோருக்கு வேண்டியாங்கு ஈய வல்லானான பரம கருணாமூர்த்தியாக விளங்கும் அருள்மிகுமுத்தாம்பிகை உடனுறை அபிராமேசுவரர் இத்தலத்தில் நடைபெறவிருக்கும் குடமுழுக்கு விழாவினைச் சிறப்பாக நடந்த வேண்டுமென்று முனைந்துள்ள திருப்பணிக்குழுச் சான்றோர்களுக்கு அருள்பாலிக்க வேண்டுமெனும் உள்ளக்கிடக்கையை என் நெஞ்சில் நிறுத்தி என் ஆன்மார்த்த நாயகரின் இணையடிகளில் பணிந்து வேண்டுகின்றேன்.

சிவ.—வேதாசலம்

உ

திருச்சிற்றம்பலம்

# சைவ சித்தாந்தப் பெருமன்றம்

4, (முதல்மாடி) வெங்கடேச அக்கிரகாரம் சாலை,
மயிலாப்பூர், சென்னை-600 004.

## எம். கிருஷ்ணன், ஐ. ஏ. எஸ் (ஓய்வு) தலைவர்

## அணிந்துரை

---

தொண்டை நாட்டுப்பதிகளுள் ஒன்று திருவாமாத்தூர். இது தேவார முதலிகள் மூவராலும் பாடபெற்றது. இவ்வூரில் கௌமார மடம் ஒன்று உள்ளது. இதை நிறுவியவர் மகான் வண்ணச்சரபம் அருள்மிகு தண்டபாணி சுவாமிகள். இவர் சிறந்த ஞானி. உயர்ந்த முருகபக்தர் அருள்மிகு அருணை முனி அருணகிரிநாதர் போல் சிவன், அம்பாள், முருகன் மீது ஆயிரக்கணக்கான பாடல்களை இயற்றியுள்ளார். இத்தலத்து முருகன் மீது அருணகிரியார் நான்கு திருப்புகழ்ப் பாடல்கள் பாடியுள்ளார் அதே போன்று முருகன் மீது எண்ணற்றப் பாடல்களை பாடிப்பரவியுள்ளார். முருகன்மீது பிணக்குக்கொண்டு பலபாடல்களைக்கொண்ட சுவடிகளைக்கிழித்து எரிந்து விட்டார் என்று சொல்லப்படுகிறது அவர் பாடல்கள் தெய்வத்தன்மை வாய்ந்தவை, எல்லாம் பக்திபாடல்கள் கவிநயமும் இலக்கிய நயமும் பெற்றவை தெய்வநிலைக்கு உயர்த்தக்கூடியவை இப்படிப்பட்ட பாக்கள் ஏராளமாக இருந்தும்அச்சேற்றப்பட்டவை ஒரு சில தான். இப்போது பீடத்தில் அலங்கரிக்கும் சுவாமிகள் அருள்மிகு தண்டபாணி சுவாமிகளின்பெயர் அவர் முயற்சியால் பல நூல்கள்வெளியிடப்பெற்றுள்ளன. பல வெளிவருகின்றன அவ்வாறு வெளிவரும் நூல்களில் ஒன்றுதான் திருவாமாத்தூர் துதிப்பாமாலை என்ற இந்நூல்

இதை நமது அன்பர் சைவ சித்தாந்த பெருமன்றத்தின் முன்னாள் பொருளாளர் திரு சிவ. வேதாசலம் அவர்கள். நமது பெருமன்றத்தின் 81-வது ஆண்டு விழாவில் சென்னை "சோதிட-ரத்ன"டாக்டர் சி. எம். சோமசுந்தரம் அவர்களின் 54-வது ஆண்டு நிறைவு நினைவு மலராக வெளியிடுகிறார். இது சிறந்த பயனுள்ள பணி.

இந்நூலில் அருள்மிகு அபிராமேசுவரப்பெருமான் மீதுகாப்புச் செய்யுளுடன் 12 பாக்களும், அருள்மிகு முத்தாம்பிகையம்மன்மீது காப்புச்செய்யுளுடன் 12 பாக்களும் அருள்மிகு கணபதி வெண்பா ஒன்றும், அருள்மிகு முருகன் திருப்புகழ் ஒன்றும் ஆக 26பாடல்கள் உள்ளன அருஞ் சொற்களுக்கு பதவுரைகளும் கொடுக்கப்பட்டுள்ளன

தேவார ஆசிரியர்களைப் போன்று நெல்லைத் திருப்புகழோன் என்றும் திருநெல்வேலியில் செந்திநாயகன் சேயெனப் பிறந்தோன் என்றும்தான் திருநெல்வேலியில் பிறந்தவன் என்றும் அறிமுகப்படுத்திக் கொண்டுள்ளார். இத்துதிப்பாடல்களை ஓதுபவர் பெறும் பயனையும் குறிப்பிட்டுள்ளார் ஆய்வு பெறுவர் என்றும் அனைத்து லோகமும் அறிய வாழ்வார் என்றும் கூறியுள்ளார்.

பக்தர்கள் இத்துதிப்பாடல்களைப் பெற்று ஓதிப்பயன் பெறுவார்களாக. இந்நூல் வெளிவர முயற்சித்த அனைவரும் நூலாசிரியரின் குருவருளும், தெய்வத் திருவருளும் பெற்று மேலும் இவ்வகைத் தொண்டுகளில் ஈடுபட வேண்டும் என்று வாழ்த்துகிறேன்.

அன்பன்

மு கிருட்டிணன்

# பதிப்புரை

பத்தொன்பதாம் நூற்றுண்டில் வாழ்ந்த புலவர் பெருமக்களுள் ஒருவராகத் திகழ்பவர் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள், புலவராக மட்டும் விளங்காமல் மகாஞக, ஞானியாக, தவசியாக அருளாளராக சமுதாயம் வாழ வழிகாட்டும் சீர்திருத்தவாதியாக பலர் உய்ய ஞானுேபதேசம் அருளிய குருவாக இயல். இசை, நாடகத்துறையில் வித்தகராக இன்ன பல வகையில் சிறந்து விளங்கியவர் வண்ணச்சரபம்தண்டபாணிசுவாமிகள் நாடகமேதை தலத்திரு சங்கரதாஸ்சுவாமிகளின் குருவாகவும் வடலூர்வள்ளற் பெருமான் மனமொத்த கருத்து உடையவராகவும் விளங்கியதை இவர் தம் வரலாறு காட்டுகிறது.

இத்தகைய அருளாளர் திருநெல்வேலியில் 1939 ல் சைவ வேளாளர் மரபில் தோன்றி இளமை முதல் வேல் வழிபாடு செய்து ஆறெழுத்தை உருவேற்றி அதன் பயஞகத்தேனினும் இனிய தீந்தமிழ்க்கவிகளை எட்டரை வயது முதல் இயற்றும் திறனெய்தினார், பலதல வழிபாட்டை மேற்கொண்டு செல்லுமிடமெங்கணும் அருள் நெறி தழைக்கத்தொண்டாற்றினர் சமய வேறுபாடுகொள்ளாமல் அறுசமயக்கடவுளர்கட்டும் துதிப் பனுவல்கள் இயற்றியதோடு அவற்றைத்தாமே பனை ஓலைச்சுவடியில் சர்வ சாதாரணி என்று முருகன்பெயர் சூட்டிய எழுத்தாணிகொண்டு எழுதியும்வைத்தனர் சந்தயாப்பிற்கென நூலில்லாமல் இருந்த குறையை „ வண்ணத்து இயல்புஎன்ற நூலருளி நிறைவு செய்தவர் எழுத்து சொல்,பொருள் யாப்பு, அணி என்ற ஐந்திலக்கணங்களைச்செய்ததோடு இவற்றை கற்பதால் வரும் புலமையைச்சிறப்பித்து அறுவகை இலக்கணம் என்ற நூல் தந்துள்ளனர் பொதுவாக இவர்கள் தம் நூல்கள் சாத்திர, தோத்திர, வரலாற்று இலக்கண, இசை நாடகம் என்பன போன்ற வகையில் பிரிக்கலாம் ஒரு லட்சம் பாடல்கள் இயற்றி எழுதிய சுவாமிகள் இறைவன் மீது கொண்ட ஊடல்கராணமாகச் சிலவற்றை அனலிலும் புனலிலுமாக அழித்து விட்டார்கள், என்ருலும் இன்றிருப்பவை ஐம்பத்து நான்காயிரம் பாடல்களாகும் அவற்றுள் ஒரு பகுதியே இந்நூல் என்பது குறிப்பிடத்தக்காகும். செல்லும் வாயெல்லாம் அறவினை ஓவாதே ஒல்லும் வகையில் சீவகருணை நெறி வளர்த்தார் பசுவதை செய்வதை அக்காலத்திலே எதிர்த்து ஆங்கில அரசைச்சாடி ஆங்கிலேயர் அந்தாதிமூலம் அரை கூவல் விடுத்தவர் எனவே பசுவினம் வாழ அருள்புரிந்த அருள்மிகு அபிராமேசுவரப் பெருமான் திருக்கோயில் கொண்டுள்ள திருவாமாத்தூரில் இறுதிக்காலத்தில் எல்லை தாண்டாவிரதமுடன் தங்கிப் பத்தாண்டுகள் தவம் புரிந்து 1898-ல் ஞானசமாதி கொண்டுள்ளனர்.

அருணகிரிநாதரின் மறுபிறவி ஒன்று முருகன்அருளியதாகத்தம் நூல்களில் பலவிடங்களில எடுத்துக்கூறும் சுவாமிகள் அறுசமயக் கடவுளர்கட்கும் சந்தயாப்பில் பாடல்களை இயற்றியுள்ளார்.

இத்தகைய அருளாளார் சமாதி கொண்டுள்ள திருவாமாத்தூரில் வாழும் அவர்தம் மரபினரான எங்களுடன் நீண்டகாலம் தொடர்பு தொடர்பு கொண்டு விளங்குபவர் சைவ சித்தாந்த பெருமன்றத்தின் முன்னாள் பொருளாளர் சைவநெறிக் காவலர் சிவத்திரு வேதாசலம் அவர்கள் அண்மையில் அவடருன் அளவளாவும் காலத்து தண்டபாணி சுவாமிகள் அருளிய நூற் கருத்துக்கள் நூருண்டு காலமாகியும் ஓட்டுச்சுவடியிலேயே இருப்பதைக்கூறிய போது தம்மாலான அளவு சிறுபகுதியேனும் தற்சமயம் வெளியிட விரும்புவதைக்குறிப்பிட்டார் திருவாமாத்தூ -ரில் தற்சமயம் இறைப்பணிமன்றம் நிறுவி அதன் துணைகொண்டு அன்பர்களிடம் நிதி உத்வி பெற்று சிவலாயத்திருப்பணிகள் செய்து வருகிறோம் சீரிய முறையில் திருப்பணிநிகழ்ந்து குடநீராட்டு நிகழ விண்ணப்பிக்குமுறையில் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் இவ்வூர் பெருமான் மீது அருளியவற்றுள் சுவாமி, அம்மான் கணபதி முருகன் பாடல்களைப்பதிப்பிக்க அவாவினர் சிவத்திரு சிவ -வேதாசலனார் அன்பினையும் நற்கருத்தையும் மனதுட்கொண்டு பாராட்டி சுவாமிகள் எழுதிய ஏட்டுச்சுவடியிலிருந்த பதிப்பாகாத பாடல்களை எழுதிச்சிறு குறிப்பும் எழுதி உதவினேன் அவற்றை பதிப்பதோடு நிற்காமல் சென்னை டாக்டர் திரு. சோதிடரத்ன திரு M A சோமசுந்தரம் அவர்களின்சோதிடப்பணியைத்தெரிந்து அதனை விளக்கித்தாமே எழுதிப்பிற்சேர்க்கையாக சேர்த்திருப்பது திரு. சிவ வேதாச்சலனார் சோதிடக்கலையின் பாற்காட்டும ஆர்வத்தைக்காட்டுகிறது திருவாளர் டாக்டர்M, A. சோமசுந்தரம் அவர்கள் 54-வது ஆண்டு மலராகப்பதிப்பித்து வடார்க்காடு மாவட்டம் இரத்திரகிரி தவத்திரு. பாலமுருகனடிமை அவர்களின் ஆதரவில் 1987 மே 16 17 தேதிகளில்நடைபெறும் சைவசித்தாந்த பெருமன்ற 81-வது ஆண்டு விழாவில் தம் பொருள் கொண்டு அச்சிட்டு வழங்கும் சைவ நெறிக்காவலர் திரு சிவ வேதாசலம் அவர்கள் சீரிய பணியைப்பாரட்டி சமயநெறியும், தமிழுணர்வும் கொண்ட அருளார்கள் அவரும் அவர் தம் குடும்பமும் நீண்ட ஆயுளும் நலமும் பெற்று வாழ்த்துவரர்கள் அதில் நானும் ஒருவன் தானே

அன்பன்

நூலாசிரியர் சுவாமிகள் பெயரர்
தி. மு. சங்கரலிங்கம்
தமிழாசிரியர்

கௌமாரமடாலயம்
திருவாமாத்தூர்
விழுப்புரம்
10—5—87



வண்ணச்சரபம்

அருள்மிகு. தண்டபாணி சுவாமிகள்

உ

சிவமயம்

திருவாமாத்தூர்

# அருள்மிகு அபிராமேசுவரப் பெருமான்
# பதிகம்

---

## காப்பு - வெண்பா

ஆமாத்தூர் வாழ்சிவனே ஐந்தொழிற்கூத் தாடும்ஒப்பில்
சாமார்த் தியமுடைய சங்கரனே! — ஏமாற்றி
பாடல்மட்டும் கேட்கின்றாய்; பாவியேன் உன்னை நம்பி
நாடல்முற்றும் இப்பொழுதே நல்கு.

*ஐந்தொழில்- ஆக்கல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் ஆதியன, நாடல்-விரும்பிக்கேட்டல், நல்கு-அருள்க*

## நூல்

## 'நீளநினைந்தடியேன்' என்ற சுந்தரமூர்த்திசுவாமிகள் பாடல் போன்ற சந்தம்

சுந்தரன் பாடலுக்காப் பொருள் தொகுத்து நல்கியநீ
செந்தமிழால் துதிப்பேன் தனைத் தியங்கச் செய்திடல் ஏன்?
மந்தரப் பூண்முலையாள் தினம் மருவு பங்குடையாய்!
அந்தரத் தோர்புகழ்சீர்த் திரு ஆமாத் தூர்ச்சிவனே 1

*சுந்தரன்-சுந்தரமூர்த்திசுவாமிகள் துதிப்பேன்தனை- என்னை தியங்க-வருந்த, மந்தரம்-மலை, முலையாள்-பார்வதி அந்தரத்தோர்-தேவர்கள்.*

முன்னம் உனைத்துதித்தேன் தவம் முதிரச் செய்திலையால்
இன்னம் இறைஞ்சுகின்றேன் இனியேனும் இரங்குகண்டாய்
பன்னகப் பூணணிவாய்! விடைப் பரியின் மேல்வருவாய்
அன்னம் மலிவயல்சூழ் திரு ஆமாத் தூர்ச்சிவனே 2

*முன்னம்-முற்காலத்தில், இன்னம்-இப்போதும் பன்னகம்-பாம்பு, பூண்-ஆபரணம், விடைப்பரி, ரிஷபவாகனம், அன்னம்-அன்னப்பறவை*

நண்ணிய வாறெருபே றுற நடத்தி யாண்டனை இன்(று)
எண்ணிய வாறுசெய சீர் தெரித் திட்டனை தாமதியேல்
புண்ணிய வானவனே! தினம் போற்றுமெய் யடியார்க்(கு)
அண்ணிய மானவனே! திரு ஆமாத்தூர்ச்சிவனே 3

பேறு-நன்மை, தெரித்திட்டனை-தெரிந்துள்ளாய்
அண்ணியம்-நீக்கமின்றியிருப்பவனே,

பந்தெனும் மென் முலையார் தரு பாழ்மயல் மிஞ்சியதால்
நொந்தெளி யேன்மெலிந்தேன் அருள் நோக்கம்வைத் தாண்டருள்
-வாய்!
வெந்தெரி நஞ்சயின்றாய்! பெரு வெற்பனும் விற்பிடித்தாய்!
ஐந்தெழுத் துள்ளவனே! திரு ஆமாத்தூர்ச்சிவனே 4

மயல்-மயக்கம், நஞ்சு-விஷம், வெற்பு-மாமேருமலை
விற்பிடித்தாய்-வில்லாகக்கொண்டாய்.

வானிடத்(து) இச்சையில்லேன் கன மண்ணிடத்(து) ஆசையுள்ளார்
போனிக ழத்தகுமோ அருட் போதம் அளித்தருள்வாய்!
பாணிற நீறணிவாய்! செழும் பவள மேனியெந்தாய்!
ஆனினம் மிக்களிகூர் திரு ஆமாத் தூர்ச்சிவனே 5

வான்-மேல்உலகம், இச்சை-விருப்பு போல்+நிகழ்தல்
போதம்-ஞானம், பால் நிறம், பவளமேனி-செம்மேனி
ஆன்இனம்-பசுக்கள் வழிபட்டு அருள்பெற்று மகிழும்.

என்னை உனைக்களித்தேன் அதை இகத்தி னோர்அறியார்
உன்னை நல் காவிடினும் அருள் உணரு மாறுசெய்வாய்!
மின்னையொக் கும்சடைமேற் பிறை விளக்கும் வேதியனே!
அன்னையில் அன்புடையாய்! திரு ஆமாத் தூர்ச்சிவனே. 6

இகத்தினோர்-இவ்வுலகினர். மின்-ஒளி, பிறை-பிறைசூடி
அன்னையில்-தாயைவிட, ''பால்... தாயினும்'' என்பதுமணிவாசகம்
வரிகளை நினைவுட்கொள்க

சித்தியெ லாம்அருளி இகற் சிதைக்கக் கண்டிலையேன்?
முத்தி எனும்பதம்நீ தான் முழுதும் மெய்ப்படுமோ?
பத்திசெய் வார்க்கெளியாய்! பல பனவர்ஏவியதோர்
அத்தி யுரித்தணிந்தாய்! திரு ஆமாத் தூர்ச்சிறுவனே. 7

எண்வகைச்சித்திகள், இகல்-பகைபனவர்-பகைவர் அத்தி-யானை

வேடன் உருக்கொடுபோய் அடல் விசையன் முற்பொருதும்
நாடல் அளித்துளநீ எனை நலியச் செய்துவிடேல்!
பாடகக் காலுமைதோள் புணர் பரம யோகியல்பேர்
ஆடலில் வல்லவனே! திரு ஆமாத் தூர்ச்சிவனே. 8

விசையன்-அர்க்சுனன், பொருது-சண்டையிட்டு பாடகம்,காலில் அணியும் ஆபரணம்

வாரண மாமுகன்வேள் எனும் மக்களைப் பெற்றுளநீ
காரணம் காட்டியப்பால் எனைக் கலங்கச் செய்திடல்ஏன்?
நாரணன் நான்முகத்தோன் தொழ நடுவில் வெற்பானுய்!
ஆரணத்(து) ஓசையருத் திரு ஆமாத் தூர்ச்சிவனே. 9

மாமுகன்-விநாயகர், வேள்-முருகன். நாரணன்-திருமால் நான்முகன்-பிரமா, ஆரணம்-வேதம்

நற்றமிழ்ப் பாவலராம் ஒரு நால்வரொ(டு) என்னைவைத்தாலிற்
குற்றமென்(று) அஞ்சுதியோ பசுக் கூட்டமிக் கின்புறும்கால்
பற்றறுப் பார்மறவா(து) ஒளிர் பரமனே!பலர்போற்(று)
அற்றம் அனந்தமுள்ளாய்! திரு ஆமாத்தூர்ச்சிவனே 10

நால்வர்-சமயாச்சாரியர் நால்வர், பசுக்கூட்டம்இன்புறும்-ஆதியில் பசுக்களுக்குக் கொம்பில்லாமலிருந்து, இவ்வூர்ப்பெருமானை வேண்டிக் கொம்புபெற்று இன்புற்றனஎன்பது. தலபுராணச்செய்தி

தூய வடலூரான் முதல் தொண்டர்கள் சிற்சிலர்தம்
நேய வழக்கையெலாம் கொளும் நெல்லைத்திருப்புகழோன்
ஆய மலிபொழில்சூழ் திரு ஆமாத் தூர்ச்சிவனைத்
தாயகம் என்றிசைக்கும் துதி சாற்றி உய்ம்மின்களே. 11

வழக்கை-வழக்கத்தை நெல்லைத்திருப்புகழோன்-திருநெல்வேலியில் தோன்றிய திருப்புகழ்ச்சுவாமிகள் என்ற பெயரினராய நூலாசிரியர் தண்டபாணி சுவாமிகள்; ஆயம்-மகளிர்கூட்டம்

தெய்வமே துணை

## ஷ திருவாமாத்தூர்
## அருள்மிகு-முத்தாம்பிகையம்மன் பதிகம்.

### காப்பு-வெண்பா

மாதை நகரில் மருவும்அருள் அம்பிகையே!
சூதைநிகர் கொங்கை துணைப்பால்அப்-போதொருவற்(கு)
ஈந்தாயே என்றனக்(கு) ஈயில் இளப்பமுண்டோ?
வாய்ந்தோதில் யான்நின்மக வன்று.

சூது-வட்டாடும் கருவி, ஒருவற்கு-சம்பந்த மூர்த்திசுவாமிகட்கு இளப்பம்-குறை, நின்மகவன்றோ-யானும் உனது மகனன்றோ

### நூல்
#### எண்சீர் விருத்தம்

எந்த லோகமும் எவ்வகை உயிரும்
ஈன்ற நின்புகழ் எடுத்தினி திசைக்கும்
இந்த வாய்ப்பல மானிடர் தம்பால்
இரந்து தாழ்வுறும் இளப்பம்நிற் கிலேயோ
கந்த நாள்மலர்க் கணையொடு கம்பும்
கரிய வேள்பெறக் கருணையால் அளித்தாய்!
மந்த மாருதம் உலவிய பொழில்சூழ்
மாதை மாநகர் மருவும்அம் பிகையே. 1

இரந்து-யாசித்து, கரியவேள்-மன்மதன், மந்தமாருதம்-தென்றல் மாதை என்பது திருவாமாத்தூர்க்குரிய மரூஉபெயர். இரட்டையர் இவ்வூருக்குப்பாடிய கலம்பகத்திலேயே 'மாதை' எனக்காணப்படுகிறது.

பம்ப ரத்துரு நிகர்முலைத் துணைதோய்
பாவை யன்னவர் பலரும்நீ எனவே
நம்ப வல்லஎன் றனைச்சில மானுர்
நசையில் வாடுற நடத்திடல் முறையோ
கம்ப மால்களிற் றுருக்கொளும் சிவனைக்
கலந்தொர் ஐந்துகைக் கரிமுகற் பயந்தாய்!
வம்பர் போற்றரும் புகழ்ப்பசும் மயிலே!
மாதை மாநகர் மருவும்அம் பிகையே. 2

ஐந்துகைக்கரிமுகன்-விநாயகர்.

பூர வாகனத் திவர்கலை மகளும்
புதிய பூமிசை பொலிந்தசெந் திருவும்
வார முற்றணந் திடவும்நல் கிடும்நீ
மனித மங்கையர் அமர்தரத் தகுமோ
கோர மார்தரப் பலர்தொழக் கனல்நேர்
கொடுங்கட் சீயமேற் குலவவும் வல்லாய்!
மாரன் மாய்ந்தபின் உயவருள் புரிந்தாய்
மாதை மாநகர் மருவும்அம் பிகையே. 3

திருவும்-திருமகளும், சீயம்-சிங்கம், மாரன்-மன்மதன்

கஞ்சன் என்தலை மீதில் அன் றெழுதல்
கடைய வாமெனிற் கழல்களால் அழித்திட்(டு)
எஞ்சல் தீர்விதி யமைக்கும் மாண்(பு) இலையோ
ஆரண னேன்தலை யிழப்புமூட் டினரோ
குஞ்ச ராசலம் உரித்தணிந் தாடும்
குழக னுரிடம் குலவிய குயிலே!
வஞ்சர் நாட நம் பெரும்புகழ்க் கடலே!
மாதை மாநகர் மருவும்அம் பிகையே. 4

கஞ்சன்-பிரமன், கழல்-திருவடி, ஆரணன்-நான்முகன்
குஞ்சராசலம்-யானை குழகன் சிவன்

வேதம் ஆதிய நூலும்அந் தணரும்
வெறுப்ப வேசெயும் விறற்பெருந் தகுவர்
பூத லத்தினிற் பிறக்கையிற் பருவம்
பொலிபச் செய்தனை போற்றெனை யகற்றேல்
சீத நாண்மலர்க் குவளையொன் றேந்துல்
செழுங்கைக் கற்பகச் சிறுமடப் பாவாய்!
மாத மாதமோர் திருவிழா நடக்கும்
மாதை மாநகர் மருவும்அம் பிகையே. 5

எண்ண ரும்பல தலந்தொறும் போய்ப்போய்
இனிய பாடல்மிக் கிசைத்திசைத் திளைத்தேன்
நண்ண லீந்திலர் ஒருவரும் இன்னே
நல்கி மாய்வரு நற்புகழ் புனைவாய்!
பெண்ண வாவிய பேரெழிற் றிருமால்
பெண்மை தோய்தர பிறங்கெழிற் பரமன்
வண்ண வாயமு(து)இரந் துணக் களித்து
மாதை மாநகர் மருவும்அம் பிகையே 6

தாம தப்புலேப் பூசைசெய் தார்க்கும்
சகம் கொண் டாடிடத் தகும்புகழ் தரும்நீ
காமர் நாடரும் தம்பமும் நின்செய்க்
கணமென்(று) ஓதெனைக் கைவிடத் தகுமோ
பாம ழைக்கொரு கருவெனும் நறும்பாற்
பார மார்முலேப் பசியமென் கொம்பே!
மாம கோததித் துயிலுளான் தங்காய்!
மாதை மாநகர் மருவும்அம் பிகையே. 7

மகோததி-கடல், துயிலுளான்-திருமால்

ஐந்து தேவரும் பரவும்நின் திருத்தாள்
அருமை ஓர்வரும் அடியனேன் கனவில்
நந்து ருவருட் குறிப்புணர்த் தியும்நான்
நவிலில்இவ் வண்ணம் நலிவுறத் தகுமோ
சந்து போயுமுத் தமிழ்க்கவி புனைந்த
தம்பி ரான்புணர் தருமகோ மளமே
வந்து வந்துசூல் முகில் பொழி மழைசால்
மாதை மாநகர் மருவும்அம் பிகையே 8

சந்நு-தூது. சுந்தரர்க்குத்தூது சென்ற தம்பிரான்சிவன்
சூல்முகில்-மழைமேகம்

காரணத் தால்யான் பிறந்ததா முக்காற்
கழறும் காங்கெயன் கரத்தில்வே லாகி
ஆரணத் தினுக்(கு) ஊறுசெய் திட்டார்
அழியத் தாக்கினே அடியனேற் கிரங்காய்!
பூர ணத்தினிற் கலந்தமெய் யருளே
புகலொ ணுப்பெரும் போதசா கரமே
வார ணத்துணே முலேமர கதமே 9
மாதை மாநகர் மருவும்அம் பிகையே

காங்கெயன்-முருகன்

வடசொற் பாவலன் தங்களில் ஒருவன்
மறைசொல் மூவிரு மதந்தொழப் பொதுவாம்
திடமுற் றேங்கிடச் செய்தனே யதுபோல்
தென்சொ லாரில்யான் திகழ்தரச் செய்வாய்

குடல்சுற் ருமிளிர் மூவிலைச் சூலம்
கொண்டு தானவர் குலமறக் களைந்தாய் !
மடமிக் கார்குலம் சூழ்தர நின்ருய்!
மாதை மாநகர் மருவும்அம் பிகையே. 10

ஒருவன்-சங்கராச்சாரியார்
மூவிரு மதம்-சௌரம், சைவம், சாக்தம், வைணவம், காணுபத்தியம் கௌமாரம் தென்சொலார்-தமிழர், தானவர்-பகைவர்

பொருவில் பேரருட் புண்ணியப் பொருப்பைப்
பூத நாதர்தோள் புணர்முலைக் கொம்பை
மருவ ருமலர்க் கூந்தலங் குயிலை
மாதை மாநகர் மருவும்அம் பிகையைத்
திருநெல் வேலியில் வடிவருள் வரத்தாற்
செந்தி ருயகன் சேயெனப் பிறந்தோன்
அருமை யாத்துதி செயுமிவை கற்பார்
அனைத்து லோகமும் அறிய வாழ்ப வரே. 11

பூதநாதர்-சிவன், மரு-மணம், நெல்லையில் காந்திமதியம்மன் அருள் வாக்கின்படி செந்திருயகருக்கு மகவாகத் தோன்றியவர் நூலாசிரியர் தண்டபாணி சுவாமிகள் என்பது குறிப்பு

## கணபதி-வெண்பா

ஆயியுடன் அப்பன் அளிகூரும் ஆமாத்தூர்க்
கோயிலிடை வாழும் குஞ்சரமே-வாயிகத்தாற்
போற்றுமென்னை வீணிற் புலரவிட்டுப் பாராதே
கூற்றுமஞ்சும் வாழ்வைக் கொடு.

## முருகன் திருப்புகழ்

தனனு தாத்தாத் தானன தானன-தனதானு
பலவூர் போய்ப்போய்க் காசென வீணினில்-அலையாதே
படிருர் பேச்சாற் சூதுசெய் மாதரை-மதியாதே
மலநோய் தீர்த்தோர் போல்பவர் வாய்மொழி-கருதாதே
வடிதோய் வேற்ருேட் டேசிக ஞகிமுன்-வருவாயே
புலவோர் பாட்டாற் ருதுமுன் னேகிய-சிவன்வாழ்வே
பொருவா மாக்கூத் தாடிய தோகையில்-இவர்வோனே
சிலர்நேர் கூக்கூக் கூமுரல் சேவல்கொள்-புயவேளே
திருவாமாத்தூர்க் கோயிலில் மேவிய-பெருமாளே.

## டாக்டர் சி. எம். சோமசுந்தரம்

மனிதராய்ப் பிறந்தவர்கள் அனைவரும் சுகமாக வாழவே விரும்புகிறார்கள். ஆனால் எல்லோரும் மகிழ்ச்சி யாக வாழ்கிறார்களா? என்று பார்த்தால், அப்படி வாழ்ப வர்கள் வெகுசிலரே. பெரும்பாலோர் ஏதேனும் ஒருவகை யில் கவலையோடு தங்கள் வாழ்க்கையை நடத்தி வரு கிறார்கள். இதற்கு யார் காரணம்?

"பெருமையும் சிறுமையும் தாம்தர வருமே!"
"பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் தத்தம்
கருமமே கட்டளைக் கல்"
"தீதும் நன்றும் பிறர்தர வாரா"



என்னும் முன்னோர் மொழிகளை நாம் எண்ணிப் பார்க்க வேண்டும். ஆனால், 'பாழாய் போன இறைவ னுக்குக் கண் இல்லை; என்னை இப்படி வருத்துகிறான்! என்று மாய்கின்றனர். உண்மையில் ஆராய்ந்து பார்த்தால் இதற்கு நாம் தான் காரணம்! இன்பமும் துன்பமும் நம்மிடம்தான் இருக்கின்றன. தங்கள் எத்தனைபேர் நிலைக்கு ஏற்றவாறு இப்படி வாழவேண்டும் என்று திட்டமிடுகிறார்கள்? அப்படி சிந்தித்துத் திட்டமிட்டு செயல்பட்டால் அவர்கள் வாழ்க்கைப்படகு இனிமை யாகச்செல்லாதா?

இன்னொரு வகையினர் சிலர், 'தாமும் நலமாக வாழ்ந்து. மற்றவர்களும் நலமாக வாழவேண்டும்' என்று எண்ணிச் செயல்படுபவர்கள்.

அத்தகைய மனிதர்களுள் ஒருவர்தான் நண்பர்களால் 'சோமு' என்று அன்போடு அழைக்கப்பெறும் டாக்டர் சி எம். சோமசுந்தரம் அவர்கள். நெடிய உருவம்; முகத்தில் மூக்குக் கண்ணாடி; அக்கண்ணடியை ஊடுருவிக் காட்சியளிக்கும்-மக்களைக் கூர்ந்து ஆராயும் ஒளிவீசும் கண்கள்; ஒட்டகம்போன்ற நடை; அதற்குஏற்றவாறு அலு வலகத்தில் இருக்கும்போது அரைக்கை பனியன் மட்டுமே

அணிந்து அலுவலக அறைக்கும் அச்சுகோர்க்கும் இடத்திற்கும் போய் வந்து கொண்டிருக்கும் சுறுசுறுப்பு; முறையான இறைவழிபாடு, எந்த விஷயத்திலும் தன் தாயாரின் ஆலோசனையைக் கேட்டு செயல்படும் பழக்கம்.

யாராவது ஜாதகத்தைக் கொடுத்துப் பலன் சொல்லும்படிக் கேட்டுக் கொண்டால், ஞான பண்டிதா! என்று தம் வழிபடு கடவுளான முருகப்பெருமான் நாமத்தை உச்சரித்துக் கும்பிட்டு அந்த ஜாதகத்தைக் கையில் வாங்குவார். இச்செயல அவரை அணுகி வந்திருப்போரின் மனதில் ஓர் உணர்ச்சியை எழுப்பும்.

பலன் சொல்ல ஆரம்பித்தால், கடகட என்று ஆணித்தரமாக - தம் மனதில் பட்ட கருத்துக்களைத் தயங்காமல் எடுத்துக் கூறுவார். அப்படிச் சொல்லும்போது வந்திருப்போரைப் பார்க்கவே மாட்டார். தம் கருத்துகளைக் கூறிய பின்பு வந்தவர்களை நோக்கி, "இப்போது, சொல்லிய பலன்கள்-கருத்துகள் ஒத்து வருகிறதா?" என்று கேட்பார். கேட்டவர்கள் அவர் சொன்ன பதில்களினால் மகிழ்ச்சி அடைகிறார்களா? அல்லது முகம் சுளிக்கிறார்களா? என்பன பற்றி அவருக்குக் கவலை இல்லை. விருப்பு - வெறுப்பற்ற நிலையில் ஜாதக ரீதியாக - கோள்களின் அமைப்பு ரீதியாக எல்லாவற்றையும் மனதில் நன்கு எண்ணித் தம்முடைய கருத்துக்களைக் கூறுவார்

இத்தகைய சக்தி அவருக்கு எவ்வாறு ஏற்பட்டது? ஜோதிடம் என்பது அவருடைய குடும்பச் சொத்து. தகப்பனார் ஒரு பிரபல ஜோதிடம்; பாட்டனாரும் அப்படியே:

இவ்வாறு குடும்பத்தின் பரம்பரைக் கலையான ஜோதிடத்தின் வழியில் நின்று தம் ஜோதிடப்பணியை அவர் ஆற்றி வருகிறார் இதற்காக வருபவர்களிடம் பணம் பெற்றுக் கொள்வதில்லை யாராவது வற்புறுத்திப் பணம் கொடுக்க வந்தால் அன்பு வார்த்தைகள் சொல்லி மறுத்து விடுவார் ஒரு ஜாதகத்திற்கு 1000 ரூபாய் வரையில் வாங்கும் ஜோதிடர்களும் உள்ள இக்காலத்தில் அவர் ஆற்றிவரும் தொண்டு அளவிடற்கரிது!

சென்னை கொண்டித்தோப்புப் பகுதியில் திருவாளர் முருகேச முதலியார் லக்ஷ்மி அம்மாள் தம்பதியாரின் அரு மந்தப் புதல்வராய் 1933-ஆம் ஆண்டில் பிறந்த இவருக்கு ஒரே ஒரு இளைய சகோதரி மட்டும் உள்ளார். டாக்டர் குருசாமி முதலியார் உயர்நிலைப்பள்ளியில் கல்வி பயின்றார் பி. காம் பட்டப்படிப்பிற்காக தியாகராசர்கல்லூரியில்சேர்ந்த இவர் படிப்பை முடிக்காமல் தெலுங்கு மொழியில் புராண இதிகாச நூல்களை அச்சிட்டு விற்பனை செய்யும்தன்குடும்ப தொழிலில் ஈடுபட்டு அதனை மிகச் சிறப்பாக நடத்திவருகி -றார் தாம் ஆற்றிவரும் ஜோதிடத் தொண்டினைத் தொடர் வதற்கு இவர்தம் இரு பிள்ளைகளையும் பயிற்றுவித்து வரு கின்றார் இருவரும் கல்லூரிகளில் படித்து வருகின்றார்கள்

'தந்தை சொல்மிக்க மந்திரமில்லை' என்ற முதுரைக் கிணங்க தம் தந்தையார் கட்டளையைச் சிரமேற்கொண்டு ஜோதிடத்திற்காகப் பணம் ஏதும் வாங்குவதில்லை. தாம் கற்றது சிறிதளவு என்று எண்ணி மேலும் சமயம்கிடைக்கும் போதெல்லாம் இது சம்பந்தமான நூல்களைப் படித்து வருகின்றார்.

ஜோதிடக் கலையைப் பரப்புவதற்காகச் சென்னையில் ஜோதிடப்படிப்புப் பயிலகம் (ஐ ஏ.எஸ்) இன்ஸ்டியூட் ஆப் அஸ்டரலாஜிகல் ஸ்டடிஸ் என்று ஓர் அமைப்பு செயல்பட்டு வருகின்றது. அப்பயிலகம் ஜோதிடக்கலையில் ஆர்வம் உள்ளவர்க்குப்பூர்வாங்கப் பயிற்சியைஅளித்துவருகின்றது

ஆறுமாத காலமுள்ள அப்பயிற்சியில் நான் சென்ற ஆண்டு படித்தேன். அப்போதுதான் நான் அவரின் சிறப்பி யல்புகளைத் தெரிந்து கொண்டேன். அப்பயிலகத்தின் சார் பில் அவ்வப்போது நடக்கும் ஜோதிட ஆராய்ச்சி விவாதக் குழுக் கூட்டங்களில் டாக்டர் சோமசுந்தரம் கலந்து கொண்டு விவாதத்தில் தம் கருத்தை ஆணித்தரமாக வெளி -யிடுவார். அதனை ஒருமுறை கேட்டவர்கள் மீண்டும் அவர் கருத்தைக் கேட்கவேண்டுமென்றஆவலோடு செல்வார்கள்.

இது அவருக்கிருக்கும் அபார ஜோதிட ஞானத்தைப்புலப் படுத்துகிறதல்லவா? இத்துடன் சமயோசித புத்தி கூர்மை யுள்ளவர். எடுத்துக்காட்டாக ஒன்றுகூற விரும்புகிறேன். கடந்த மார்ச் மாதத்தில் நடந்த விவாதக் கூட்டத்தில் ஓர் பிரச்சனை எழுந்தது; சபையின் முன்னர் மேஷ லக்கின ஜாதகத்தைப்பரிசீலித்துப் பலன்களை ஆராய்ச்சியாளர்கள் தத்தம் கருத்துக்களைக் கூறினார்கள். அக்கூட்டத்தில் ஓர் இளைஞர் ஒவ்வொரு விவாதத்திலும் ஏதேனும் ஒருகேள்வி யைக்கேட்டு சபையோரைக் குழப்பத்தில் ஆழ்த்துவார். இத-னால் சபையின் நேரம் வீணானதே தவிர உருப்படியான கருத்துக்கள் வெளிவர இயலுவதில்லை. இதனை எந்தவிதத் தில் தடுக்கலாமென்ற கவலை பயிலகத்தின் செயலாளருக்கு இருந்து வந்தது. அன்றும் அதே சிக்கல் செயலாளரும் டாக்டர் சோமசுந்தரம் அவர்களும் ஏதோபேசிக்கொண்டார் கள்; அவ்வளவுதான், உடன் டாக்டர் சோமசுந்தரம் அவர்-கள் எழுந்துநின்று குதர்க்கமாகக் கேள்வியைக் கேட்டஅந்த வாலிபரைப்பார்த்து "பாருங்கள் தம்பி! உங்கள் கேள்வியா னது இப்போதுள்ள ஆராய்ச்சிக்குப் புறம்பானது. இல்லாத ஓர் விஷயத்தைக்கூறி அதற்கு விடையளிக்குமாறு கேட் கிறீர்கள் ஆயினும் உங்கள்கேள்விக்கு நான் பதில்சொல்கி றேன்,, என்று அவரை மடக்கி மடமடவென்று தம்கருத்தை தக்க ஜோதிடப் பாடல்களாலும். ஜோதிடரீதியான விமர்-சனத்தாலும் விடையளித்துக் கொண்டிருந்தார் அவர்பேசி முடித்தபின் கேள்வியைக் கேட்ட வாலிபரைக் காணோம்! எப்போதோ எழுந்து சென்று விட்டிருக்கிறார் இதையெல் லாம் கூர்ந்து கவனித்த அன்பர்களுக்கு இந்நிகழ்ச்சி பெரு மகிழ்ச்சியை அளித்தது. குறிப்பாக செயலாளருக்கிருந்த கவலை நீங்கியது. ஐம்பத்து நான்கு வயதுள்ள டாக்டர் சோமசுந்தரம் அவர்களுக்கு சுமார் முப்பத்திநான்கு ஆண்டு களாகஜோதிடத்தில் பயிற்சியுண்டு. பெங்களூரிலிருந்தஒரு பிரபல ஜோதிடப் பயிலகத்தில் பயின்று "ஜோதிட ரத்னா', என்ற பட்டமும் பெற்றுள்ள இவர் ஜோதிடக் கலையை துவக்க காலத்தில் தன் தகப்பனாரிடத்தில் பயின்றதோடு நில்லாமல், முப்பது ஆண்டுகளுக்கு முன்னர் பிரபல ஜோதி

ராகத்திகழ்ந்த "நாடி ஜோதிடசிங்கம்" என்று அழைக்கப் படும் மாணிக்க முதலியார் என்பவரை அணுகி தம் ஞானத் தை மேலும் வளர்த்துக் கொண்டார். உங்கள் பயிற்சி ஆசிரியரைப் பற்றி சற்றுக் கூறுங்கள்! என்று கேட்டதற்கு அவர் பதில் சொல்ல ஆரம்பித்ததும் அவரது நா தழு-தழுத்தது; வார்த்தைகள் வெளிவரவில்லை; கண்களில் நீர் பெருகியது. என்னே அவரது குருபக்தி! எந்தக்கலையும் குரு வருளன்றி சித்திக்காது என்பது நம் முன்னோர்களுடைய தீர்க்கதரிசனம். குருவினுடைய ஆசி இவருக்கு பரிபூரண மாகக் கிட்டியது. தம் குருநாதர் சிலசமயம் கூறும்பலன்கள் சரியாகப் பொருந்தவில்லை என்று குறை கூறுவோர்களிடம் தம் குருநாதர் திரு. மாணிக்க முதலியார் ஆணைக்கிணங்க அவர்களை இவரே அணுகி அவர்களிடம் விவாதித்துத் தம் குருநாதரின் கூற்றுசரியே என்றுகூறி கேட்பவர்கள் திருப் தியாக ஏற்றுக்கொள்ளச் செய்திருக்கிறார். எழுபத்தைந்து ஆண்டு நிரம்பிய தம் குருநாதர் வயது முதிர்ச்சியினால் சில சமயங்களில் கூறும் பலன்கள் அங்குமிங்குமாக ஏதாவது பொருந்தாமல் கூறப்பட்டிருந்தால் அவற்றையெல்லாம் தாம் மீண்டும்விமர்சித்துக் குறைகூறுபவர்களை மனஅமைதி படுத்துவார். 'ஜோதிடக் கலையினால் முக்காலத்தை-யும் அறிய முடியும்' என்ற சித்தாந்தத்தைத் தம் தகப் பனாரும், பாட்டனாரும் எப்படி நிலை நாட்டினார்கள் என்பதை அவர் விவரிக்கும்போது 'ஜோதிடம் என்பது ஒரு புராதனக் கலை என்பது மட்டுமன்றி ஒரு விஞ்ஞான கலையு-மாகும்' என்றே ஏற்றுக் கொள்ளத் தோன்றும்

தம்முடைய தகப்பனார் தாம் இன்றும் அரைமணி நேரத்தில் இறந்து விடுவேன் என்றும் தம்முடைய பாட்ட-னரர் அவ்வாறே இன்றும் ஐந்து நிமிடத்தில் இறந்துவிடு வேன் என்றும் கூறி இருவரும் அவர்கள் குறிப்பிட்ட வேளைக்குள் காலமானார்கள் என்பதை விவரிக்கும்போது அவர்களுக்கிருந்த ஜோதிடஞானம் எத்தகைய நுணுக்கம் வாய்ந்ததாய் இருந்தது என்பது புலப்புடுகிறதல்லவா? இதனைக் கூறிய இவர் மேலும் கூறியதாவது;

நமது முன்னோர்கள் சுமார் இரண்டாயிரம் ஆண்டு களுக்கு முன்பே ஜோதிடக்கலையின் நுண்மையை அறிந்து சூரிய கிரகணம், சந்திர கிரகணம் எப்போது ஏற்படுமென்பதை முன் கூட்டியே எடுத்துக் கூறியிருக்கிறார்கள். தற்போது விஞ்ஞானக் கலை வளர்ந்து. அதன் அடிப்படைகளில் கோடிக்கணக்கான பணம் செலவழித்து அந்த உண்மையை அறிந்து அப்படியே ஏற்றுக்கொள்கிறோமென்றால் இதன் மேன்மையை நுண்மையை எவ்வாறு எடுத்துரைப்பது? ஆனால் தற்காலத்தில் எதனையும் தீர்க்கமாக ஆராயாமல் விஞ்ஞானத்தை மட்டும்அடிப்படையாகக் கொண்டு ஜோதிடம் என்பது ஒரு மூடநம்பிக்கை என்று ஒரு சிலர் கூறுவது அறியாமையேயன்றி அது ஜோதிடக் கலையில் குற்றமன்று. இப்படிப்பட்ட உன்னதக் கலையை நாமும் சிரத்தையுடன் படித்தால், அல்லது அவை கூறும் உண்மைகளை மேற்கொண்டால் விரும்பும் நல்ல பலனை அடைய முடியுமென்பதில் சந்தேகமில்லை"

நமது சமயாசாரியர்களில் ஒருவரான அப்பர் சுவாமிகள் தாம் பாடியருளிய தேவாரப்பாடல் ஒன்றில் "ஆறங்கம் நான்கு வேதம் ஆனான் கண்டாய் என்று பாடியுள்ளார். சிட்சை, வியாகரணம். திருத்தம், ஜோதிடம், கற்பம், சந்தோவிசிதி என்பன அந்த ஆறு அங்கங்களாகும்.

இப்படி உபவேதங்களில் ஒன்றாகத் திகழும் ஜோதிடக் கலையை நாமும் போற்றிப் பயன்பெறுவோமாக.

இன்னொரு சிறப்பு அம்சம் இவரிம் உள்ளது. அவற்றைக் குறிப்பிடுவது எனது கடமையாகும். அதாவது இவர் மகப்பேறுஇல்லாதவர்களுக்கு மருத்துவஆலோசனைவழங்கித் தக்க மருந்து எழுதிக் கொடுத்து மகப்பேறு உண்டாக மக்களுக்குச் சேவை செய்து வருகிறார் இதனைத் தொண்டாகவே செய்து வருகிறார். முறையாகப் பயின்று" ஆர்.ஐ. எம் பி." பதிவுப் பெற்றுள்ள இவர் வைத்தியத் துறையின்

எல்லா நோய்களைப் பற்றி அறிந்திருந்தாலும்கூட சிறப்பாகப் பிள்ளைப்பேறு இன்மை குறித்து ஆராய்ச்சி செய்து தக்க மருந்துகளை முதலில் தாம் நன்கு சோதித்து பின்னர் மக்களுக்கு எழுதிக்கொடுத்து வருகிறார். இத்துறையில் இவருக்கு ஆர்வம் ஏற்படக்காரணமாக இருந்தது. இவரது சொந்த அனுபவமேயாகும் அதாவது இவருக்குத் திருமணம் ஆகிப் பதினோரு ஆண்டுகளுக்கு மேலாகியும் குழந்தைப்பேறு ஏற்படவில்ல. இவரது தகப்பனர் ஒரு சிறந்த ஜோதிடரானதால் நிச்சயமாகப்பிள்ளைப்பேறு உண்டுஎன்று அவர் அறியும் மனஅமைதி பெறாமல் இத்துறையில் சிறப்பு ஆராய்ச்சிகள் மேற்கொண்டார் அந்த அனுபவம் மற்றவர்களுக்கும்பயன்படவேண்டுமென்று கருத்தில் இத்துறையில் ஆலோசனைகளை இலவசமாக வழங்கி வருகிறார்.

இவ்வாறாக மக்களுக்கு ஜோதிடம், மருத்துவம் என்கிற இருவிதத்துறைகளில் சேவைச் செய்து வருகிறுர் பலன் பெற்றவர்களின் நல்வாழ்த்துக்கள் - இவரைப் பல்லாண்டு நீடு வாழச்செய்யுமென்பதில் ஐயமில்லை! அவர்களோடு நானும் கலந்துக்கொண்டு டாக்டர் சோமசுந்தரம் அவர்கள் பல்லாண்டு நீடூழி வாழ்ந்து எல்லாப் பேறுகளையும் பெறுவாராக! என்று என் ஆன்மார்த்த நாயகரிணையடி பணிந்து வாழ்த்துகிறேன்

சிவ. வேதாசலம்
சைவ சித்தாந்த பெருமன்ற
முன்னுட் பொருளாளர்
சென்னை

# சோதிட படிப்புப் பயிலகம்

(பதிவுப்பெற்றது)

புருடோத்தம் மாளிகை

அண்ணாசாலை சென்னை - 600002

## ஆற்றி வரும் பணிகள்

★ சோதிடக் கலையில் பூர்வாங்கப்பயிற்சி அளித்தல்

★ சோதிடர்களை ஒன்று திரட்டி சோதிடம் தொடர்பாக ஆராய்ச்சி நடத்தல்

★ மாத இதழ் வெளியிட்டு வருதல் [ஆங்கிலம்]

★ நாடெங்கிலுமுள்ள சோதிடக்கழகங்களுடன் இணைந்து பொதுவிதிகள் நிர்ணயித்தல்

★ சோதிடக்கலையைப் பட்டப்படிப்பு பாடத்திட்டத்தில் சேர்த்து கல்லூரிகளில்பாடமாக வைக்க அரசைக்கேட்டு கொள்ளுதல்

★ சமூக விரோதிகள் சோதிடக்கலையின் பெயரால் மக்களைச் சுரண்டுவதைத் தடுக்க ஆவன செய்தல்

குறிப்பு:- சோதிடக்கலையில் பூர்வாங்கப் பயிற்சி வகுப்பு (ஆறுமாதகாலம்) பயிலகத்திளுல் அளிக்கப்பட்டுவருகின்றது விரிவான தகவல் வேண்டுவோர் நேரில் தொடர்பு கொள்க

எம். பி. கோவிந்த்
தலைவர்

கே. அசுவத்தப்பா
கவுரவ செயலாளர்